

# நயனம்

ஜெர்மனியைச் சேர்ந்த ரெய்னர் வில்கம் 1863-ல் மொழி பெயர்த்த அரிய இந்திய இசை நூலான 'கானலயசாகரா' என்ற புத்தகத்தில் காணப்பட்ட சிறு குறிப்பே செளகத் அலிக்கு முதலில் அந்த இசைக்கருவியைப் பற்றிய அறிமுகமாக இருந்தது. அப்போது செளகத் பதினான்கு வயதுச் சிறுவனாக உஸ்தாத் குலாம் அலி கானிடம் தானேயில் இசை பயின்று கொண்டிருந்தான். ரத்தன்பூர் நெசவாளிக் குடும்பமான நெளசாத் வீட்டின் பூர்வ இசை மரபில் வந்த செளகத் அலியை நாலு வயது முடியும் முன்னமே இசை கற்க அனுப்பியிருந்தனர். அவன் குரல் சுகந்தமுடையது என அறிந்த உஸ்தாத், தனது பேரனைப் போல அவனிடம் ப்ரியம் கொண்டு இசையை அறியச் செய்து வந்தார். ரெய்னரின் புத்தகத்தை உஸ்தாத் குலாம் அலி கானின் மரப் படுக்கையடியில் கண்டு எடுத்தபோது, அதன் முகப்பே செளகத்தை வாசிக்க அழைத்தது.

பன்னிரெண்டாம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்த உமை யொருபாக தம்பிரான் அறிந்திருந்த அந்த அரிய இசைக்கருவியின் பெயர் 'நயனம்' என்றும், அது ஒரு தலைமுறைக்கு ஒருவனுக்குக் கற்றுக் கொடுக்கப்பட்டதென்றும், தொல்தலைமுறையாக அதை வாசித்து வருபவர்கள் தெற்கில் இருந்தார்கள் என்றும் வில்கம் தனது நூலில் குறிப்பிட்டிருந்தார். இசைக் கலைஞனின் மனத்தின் சுனையில் துளிர்க்கும் இசையை எல்லா இசைக் கருவிகளும் உலகின் இசையாக வெளிப்படுத்தும்போது, 'நயனம்' மட்டும் உலகின் இசையை ஒருவனுக்குள் கொண்டு வரச் செய்யும். இசைக் கருவிகளின் இசைக்கருவி எனக் கூறப் பட்ட நயனம் வாசிப்பவனுக்குள் மட்டுமே கேட்கக் கூடிய தாகவும், பிறருக்கு இந்த இசை கேட்க முடியாதது எனவும்

படித்தபோது செளகத் அலிக்கு விசித்திரமாக இருந்தது. இது போன்ற விநோதக் கருவிகளின் இசையைக் கற்றுவிட வேண்டும் என்ற முனைப்பு அவனுள் சுடரைப் போல அலைவுகொள்ளத் தொடங்கியது. இசை நூலகங்களின், பாடகர்களின் தனிமைப் பேச்சுகளிலும் அவன் நயனத்தைப் பற்றி அறியத் தேடித் திரிந்தான். அது அழிந்துவிட்டதென்றே பலரும் சொல்லிப் போயினர் ஹரி பஜனையில் அலையும் பண்டா ஒருவன் மூலம் லக்னோவில் மூலிகை வைத்தியம் செய்யும் ஒருவனுக்கு இதைப் பற்றித் தெரியும் என்பதைக் கேட்டு அவனைத் தேடிக் கண்டடைந்தான். குறுக்குச் சந்துகளும், மரத் தடுப்புகளும் கொண்ட வீதியொன்றின் உள் ஒடுங்கிய வீட்டின் ஒற்றைக் கதவு அறையில் இருந்த வைத்தியன் பிறவி ஊமையாகவும், மெலிந்த திரேகியாகவும் இருந்தான். தன்னிடம் அந்த இசைக் கருவி இல்லையென்றும், அதை அறிவதோ, கற்றுக்கொள்வதோ எளிதானதல்ல. அது புலன்களின் இசையென்றும் எழுதித் தந்தான்.

வேட்கையின் தீவிரம் நயனம் தேடி ஊர் ஊராகப் பயணிக்கச் செய்தது. நீண்டகால தூரப் பயணத்தின் பின்பு தென் ஈஸ்வரக் கோயிலில் ஓதுவாராக இருக்கும் மெய்கண்டம் பிள்ளையைச் சந்தித்தபோது, அவர் அந்த இசையை அறிந்த எண் இசை வேளாளர் குடும்பமொன்று ஆப்தநாதர் கோயிலுக்குச் சேவை செய்து வருவதாகவும், அது தாமிரபரணிக் கரையில் இருக்கிற தென்றும் சொல்லி, அந்தக் குடும்பத்தில் தலைமுறையாக எட்டு ஆண்மக்கள் பிறக்கிறார்கள். ஒவ்வொருவரும் ஒரு இசை அறிந்தவர். அதன் மூத்தப் பிள்ளைக்கு நயனம் அறியும் திறன் உண்டு என்றார். ஆப்தநாதர் கோயிலுக்கு இருபத்தி ஏழு தலைமுறையாக இசை வாசித்து வரும் அவர்களைத் தேடி செளகத் அலி பயணமானான்.

சிவப்பு நாழி ஓடுகளும் தனித்த மனைகளுக்கும் நடுவே வீழ்ந்து கிடக்கும் கிராமங்களைக் கண்டபடி ரயிலில் வந்து சேர்ந்தான். இரவில் மழை பெய்திருக்கக் கூடும். அவன் இறங்கிய காலையில் சுவர்களில் ஈரவாடை ததும்பியது. நூற்றாண்டு பழைமையான எண் இசை வேளாளர் வளைவுக்கு அவன் வந்து சேர்ந்தபோது, கோயில் கதவு போல பெருத்த ஒற்றைக் கதவு கல்சுவரில் சாத்தப் பட்டிருந்ததைக் கண்டான். எட்டு வீடுகளிருந்தன. ஒரே மர வளைவுகள் கொண்ட, இரட்டை ஓடு வேய்ந்த எட்டு வீடுகள்.

மெலிந்த பசுவொன்றும், அகன்ற ஆட்டு உரலில் மாவைத் தள்ளியபடித் திரும்பிய பெண்ணும், கோபமேறிய குரல்களும், தேய்ந்த பதிகம் பாடும் குரலும் வெண்கல மணிச் சப்தமுமுள்ள அந்த வளைவு கரும்பச்சை வடிய இருந்தது. அவன் மூத்தப் பிள்ளையின் வீட்டை விசாரிக்க முதல் கதவைத் தட்டினான். எதிர்ப்பட்ட ஆண் ஒருவனின் குத்திட்ட தலைமயிர் கண்பட, பதில் வராத வீட்டினின்று திரும்பிச் சிரித்தான் சௌகத். அப்படி எந்த இசைக்கருவியும் இல்லையென்றும், அதெல்லாம் அழிந்து விட்டதாகவும் கோபக் குரலில் பேசியவன், பதிலுக்குக் காத்திராமல் வீடு போனான்.

அவனிடம் பேசக் கூட எவரும் தயாராக இல்லை. மாலை வரை ஆற்றின் இடிந்த படித்துறையில் அமர்ந்தபடி நினைவின் குமிழ் களைக் கிளறியபடி இருந்தான். ஆற்றில் தண்ணீர் அதிகமில்லை. ஒற்றை வாத்து மட்டும் சப்தமிட்டபடி நாணல் புதர்ப் பக்கம் அலைந்துகொண்டிருந்தது. கோயில் மணி ஓய்ந்து இரவு கவிந்தது. சௌகத் அலியை மூத்தப் பிள்ளை கூட்டிவரச் சொன்ன தாக இரண்டு சிறுமிகளும், ஒரு சிறுவனும் வந்து சொன்னார்கள். மூத்தப் பிள்ளைக்கு எழுபது வயதைத் தாண்டியிருக்கக் கூடும். கருகருவென இருந்தார். பார்வை மங்கத் தொடங்கியிருந்தது. விரல் தொட்டுப் பேசினார். அவன் தன் அலைக்கழிப்பான பயணத்தைப் பற்றி மெதுவான குரலில் சொல்லி முடித்தான்.

அவர் முகத்தில் சலனமேயில்லை. பின் அவர் நயனம் தன்னிடம் உள்ளதென்றும், அதைக் கற்றுக்கொள்ளக் கடும் பயிற்சி வேண்டுமென்றும் கூறி அவன் தன் வாழ்நாளுக்குள் அதைக் கற்றுக்கொள்ளவும் நேரலாம், அல்லது கற்றுக் கொள்ளாமலே ஆயுள் முடிந்துவிடக் கூட முடியுமென்பதால், அதற்கு அவன் உடன்படுகிறானா எனக் கேட்டார். சௌகத் அலி ஒப்புக் கொண்டு விட்டான். தான் அவனுக்குச் சொல்லும் எதையும் மறுபதில் பேசாது செய்துவரச் சம்மதம் வாங்கிய பின்பே மூத்தப் பிள்ளை அவனைத் தன் சிஷ்யனாகச் சேர்த்துக் கொண்டார். அவரது வீட்டின் மாடியறையில் தங்கிக்கொண்ட சௌகத்துக்கு அவர் இசை பற்றிய பாடம் எதையும் கற்றுத்தரவே இல்லை. பதிலாகப் புலனறிவு, மெய், போகம், சூட்சுமம் என்ற பாடங் களைச் சொல்லி வந்தார். கரடு நிரம்பிய மலை மீது நடப்பதும், சுடுவெயிலில் பனைவிடலிகள் நடுவே திரிவதுமாக அவனும் அவருமிருந்தனர். தன் வாழ்வின் பெருங்கனவான நயனம் என்ற

அந்த இசைக்கருவியை ஒரு முறையாவது பார்த்துவிட முடியாதா என்ற ஏக்கம் ததும்பக் காத்திருந்தான். காலம், வீட்டு மரங்களைப் பூக்கவும், இமை உதிர்க்கவும், வெயிலேறி அலையவும் செய்த படிச் சுழன்றுகொண்டிருந்தது.

பன்னிரெண்டு வருஷங்கள் அங்கேயிருந்த சௌகத், வீட்டு மனிதனைப் போலாகிவிட்டான். எப்போதாவது அவன் பாடுவதும் வீட்டுப் பெண்கள் கேட்பதும் கூட நடந்தேறின. நிலா அழிந்த இரவொன்றில் மூத்தப் பிள்ளை உறங்கப்போன சௌகத் அலியை வரச் சொன்னார். அவன் மாடி விட்டு அவர் அறை வந்தபோது ஆற்றுக்குக் குளிக்கப் போகலாம் வா! என அழைத்த படி சாயவேஷ்டியைச் சுருட்டி நின்றார். பனிக்காலத்தின் இரவில் ஆறு நீளோடியிருக்கும். அதுவும் நிலாவுமற்ற வான் கொண்ட இரவு என்பதால் அவன் தயங்கினான். அவர் சௌகத் கைகளைப் பற்றியபடி நடக்கத் தொடங்கினார். வீதியில் மூடப்பட்ட கதவுகளும், துளை விழ முடியாத இருளுமிருந்தன. நீரோட்டத் தின் சப்தமும் அற்ற ஆறு இருவரையும் எதிர்கொண்டது. ஆற்று நீரில் இருவரும் இறங்கிக் குளித்தனர். மூத்தப் பிள்ளையின் முகம்கூடத் தெரியவில்லை. இடுப்பளவு ஓடிய தண்ணீரில் நின்றபடி சௌகத் அலி அவரைத் தேடினான். அவரது விரல்கள் தன்னைத் தேடுவதையும் உணர்ந்தான். தனது கைகளை முன் நீட்டியபோது அவர் விரல் அகப்படும் முன்பே அந்த ஸ்பரிச உணர்வு பற்றிக் கொண்டது. நிமிஷ நேரம், அவர் தெரிய வில்லை. படித்துறையின் கல்தேவதைகள், ஆகாசம், தண்ணீர், நட்சத்திரங்கள் எல்லாம் சிதறி உருகி ஏதோ ஓர் இசை தன் உடலெங்கும் ஓடி நிரம்புவதை உணர்ந்தான். மணல் துகளின் பெருமழை போல இசை தன் உடலெங்கும் ஓடி நிரம்புவது தெரிந்தது.

இரவு கலையவில்லை. இயக்கத்தின் கதி குறைந்து மெதுவாகி, கண்ணைத் தாழ்த்தியபோது நீரினடியில் மீன்கள் ஒளியைப் பீச்சியபடி அலைவதையும், தவளைகளின் கண்களில் பச்சை மினுக்கடிப்பதையும் காண முடிந்தது. நீரோட்டத்தில் துழாவிய மூத்தப் பிள்ளையின் விரல்கள் அவன் விரலைப் பற்றிக் கொண்டன. தலையைக் கூடத் துவட்ட மனமின்றி அவன் பிடியினின்று தன் விரல்களை எடுக்காமல் மூத்தப் பிள்ளை படித்துறையில் நின்று விம்மினார். அவனுக்குப் பாடம் முடிந்துவிட்டதாகக் கூறி, விடியும் முன்பு அவன் ரயிலேறி

சொந்த ஊர் போகலாம் என்றபடி அவன் பிடியை உதறித் தனியே நடந்து வீடு திரும்பினார். சௌகத் அலி அவர் சொன்னபடியே புறப்பட்டுப் போனான். அந்த நாளின் பின்பு அவனது வாழ்வே திசைமாறிப் போனது. இசைக் கலைஞனாக வர வேண்டும் என்ற ஆசை புதையுண்டு போக ஊர் ஊராக அலையும் பக்கீர் போலானான். இரவு படுத்துக் கிடந்தபோது கரப்பான் பூச்சிகளின் கூட்டமொன்று தன்னருகில் பயமின்றி அலைந்து திரிவதையும், அதன் சிரிப்பையும் கேட்டான். நயனம் என்ற இசைக்கருவி தனது உடல்தான் என்றும், இமைகளை மூடித் திறப்பதன் மூலம் அது உலகின் பரவச இசையை தனக்குள் இடைவிடாது நிரப்பிக்கொண்டிருக்கிறது என்ற ரகசியத்தையும் கரப்பான் பூச்சிகளுக்கு எடுத்துச் சொன்னபோது, அவை ஏற்கெனவே புலன்களின் இசையைப் பாடியபடி எங்கும் அலைந்துகொண்டிருந்தன.